ரான, அதிலும் முதலான அகரத்தை அடியாக்கி அடி தொழும் பாங்கினை உணர்த்திட,

" அகர முதல எழுத்தெல்லாம ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று கூறினர்

எழுத்தின் அடிபபடையான அகரம் போன்று இறைவன் பாதம் நாம் பற்றிக் கொள்ள உலகில் அமைந்துள்ளதை எளிமையாகக் காடடினர் வள்ளுவரும்

இதே போல சடகோபர் இயறறிய திருவாயமொழியைப பெருமைப படுத்திக் காடடும் பாடல் ஒன்றில் "மிக்க வேதியா வேதத்தின் உட பொருள நிற்கப பாடியென் நெஞ்சுள் நிறுத்தினன்" எனச் சுடடும் வேதத்தின் உட பொருள் நிற்கப பாடி என்பதில் நிற்றல் என்பது நிலையாக்கி அழியாத் தன்மை பெறச்செயதல் எனப தன்றோ? நெஞசுள் நிறுத்தினன் என்பதும் வேதத்தின் உடபொருளாக வேதநாயகனை நெஞ்சுள் நிறுத்தபபட வேண்டுமானால் நாராயணனின் தாள் பற்றினல்தானே நிறுத்த முடியும்

திருமாலின் திருபபாதஙகள் பற்ற வேண்டும், அவன் பாதமே கதி என்ற சரணாகதி தத்துவத்தைக் காடடவே வைணவத்திருத்தலஙகளில் திருமால் பாதம் பொறிககபபடட சடாரியை வழிபடும பகதாகள சிரத்தில வைத்துக் காடடுவது இதன் கருத்தை வலியுறுத்தவே திருபபாவையில் "சிற்றஞ்சிறு காலே வந்துன்னைச் சேவித்து உன் பொற்றாமரையடியே போற்றும"; என வருகிறது

"பொற்றாமரை அடி"

என்பதில் உள்ள பொன் என்பது தனித் தஙகத்தைக் கொள்ள வேண்டும் தனித்தஙகம மிருதுத்தன்மையும் கலபபறற உயர்த் தன்மை கொண்டதும என‌க்கொண்டு, மலரின் மென்மை போன்ற தன்மை கொண்டவனின் திருவடி என்ற பொருள் கொண்டால் பொற்றாமரையடியின் தன்மை புரியும்

இக்கருததை நிலைநாடட திருவெம்பாவையின் மணிவாசப பெருமாள் 'விண்ணோர்கள் ஏத்துதறகுக கூசும் மலர்பபாதந்தந்தருள வந்தருளும் தேசன் சிவலோகன் தில்லைச் சிறறம்பலத்தின ஈசனார்க் கன்பார்' என்பதில் தேவர்கள் வணங்கிட அரிதாகி, தில்லையிலே இம்மண்ணில் நாம் காண வந்துள்ள ஈசனின அடி போற்றி அவனை வழிபடும் அடிமைகள் அல்லவா? என்ற பொருள் மூலம் இறைவன் அடியே சரணடைய ஏற்றது என்பது தெளிவன்றோ?

அபபர் சுவாமிகள் ஆண்டவனின் திருவடி வணஙகுவது மடடுமின்றி எந்தப பிறவி எடுத்தாலும் நின் திருவடி மறவாது இருக்க வேண்டும என்று திருவடிப பெருமையைத் தானே கூறுகிறார்

" புழுவாய்ப பிறக்கினும் புண்ணியா
உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரந்தர வேண்டுமின்
வையகததே "

எனும் கூற்றில், புழுவாகப பிறந்தாலும் திருவடி மறவாத் தன்மை வேண்டுமெனும் அவா நெஞசம் என்றால் திருவடிப பெருமைக்கேது குறை

எபபதிகங்களிலும இறைவனைப போறறுவதில் சேவடி போற்றி, மானடி போற்றி, திருவடி போற்றி, மலரடி போற்றி, திருபபாதம் போறறி, சிவனடி போற்றி, திருமலரடி போற்றி, பூங்கழல்கள் போற்றி, பொன்னடி போறறி எனத் திருவடிகளைக் கூறுவது எதனால்? வழி வழியாக வழிபாடடு முறையில் தலை முதல் அடிவரை இறைவனஅடிகளில் பணிந்துயய வேண்டுமென்ற காரணம் தானே? இதற்கு அடிபபடை திருவடிகள் அன்றோ?


உ

ஓம் சப்த விக்னேஸ்வராய நம :
ஓம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
"வேதோநித்யம் அதீயதாம்"

"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்"

ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் அம்மா ஓம் காமாக்ஷி நம :
ஓம சந்திரசேகரேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம ஸ்வாமிகள் நம :
ஓம் ஜயேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம :

இந்தக்கடடத்தில் உள்ளதை 108 தடவை எழுதி (யாரும் எந்த மொழியிலும் எபபொழுதும் எழுதலாம்)
அத்துடன் கூட ரூ.5/- (ரூபாய் ஐந்து மடடும்) மணியார்டர் மூலம் கீழ்க்கண்ட முகவரியில் சமர்பபிக்கவும்
"வேத ஒளி" படமும், புனித பிரசாதமும் அனுபபபபடும்

எல்லாம் நன்மைக்கே எல்லாம் நல்லதே நடக்கும்

அனுபப வேண்டிய முகவரி
B. R மகாலிங்கம்,
D-16-A, பவர் சாலை, பிளாக்-27, நெய்வேலி-607 803. தமிழ்நாடு

பாரதப போருக்குக் கண்ணன் துணைநாடி அர்ச்சுனன் சென்றபோது கண்ணன் மோனத்துயில் கொண்டுள் ளான். அர்ச்சுனன் வந்து கண்ண னின் திருவடிகளே சரணம என்று பாதங்களின் பக்கத்தமர்ந்தான். செருக்குடன் வந்த துரியோதனனே சிரத்தின் பக்கம் அமர்ந்தான் இறைவன் கருணைபபாாவை யாருக்கு முதலில் கிடைத்தது? அர்ச்சுன னுக்குத் தானே?

அரவணைத் துயில் கொண்ட திரு மாலின் திருவடிகள் பற்றி இலக்குமி தேவி பணிவிடை செயவது எதைக் காட்டுகின்றது? திருவடி பற்றிடத் தானே?

சூரனை முருகன் எதிர்த்து அழித்து விடவில்லையே? தன் அடிபணிந்த சூரனை தன் அருள் நோக்கில் மயிலாக் கித் தன் வாகனமாக ஒரு பகுதியை யும், பிறிதொரு பகுதியைத் தன் கொடியான சேவலங் கொடி யோனுகவும் வைத்து பகைவனையும அழிக்காது, பகைவனும் அடிபணிந்த காரணத்தால் அருளுடை உள்ளங் கொண்ட முருகன் கருணையாலேயே "கருணைபுரிகந்தன்" எனபபட்டான்

அடி முடி என்பதும் அடி முதல் முடிவரை என்பதும் அன்றாடப பேச்சு வழக்கெனும் போது அடியின் பெருமையும் புரியும் எபபொருளும் எவ்வுயிரும் நிலைபெறறு நிற்கக கார ணம் "அடி" தானே! பேரின்பப பெருவீட்டுப பேறறில் நிலைத்திட இறைவன் திருவடிதானே துணை

இந்து சமயம், பலவித உருவ வழி பாட்டைக் கொண்டது இறைவன் எடுத்த அவதாரங்களை, திருவிளை யாடல்களை அனைத்தையும் அவவுரு வங்களையெல்லாம் தொழுது வணங் கிடும தன்மையால் உருவங்கள் மாறு பட்ட முறையில் வழிபாட்டிற்கேற் பட்ட வழிமுறையாயினும் ஆதி அந்த மில்லாத அலகிலா விளையாட்டுடைய இறைவன் ஒருவனே என்பதை யாரும மறுபபதற்கிலலை - மறப பதற்கில்லை

பல்வேறுபட்ட உருவங்கள் கொண்ட தெயவத் திருஉருவங்களில் பல தலைகள், பல கைகள கொண்ட தன்மைகள் உண்டு ஆனால் எந்த தெய்வ உருவத்திலும் கால்கள் இரண்டுதான் அதில் மாறுபாடு இல்லையே! இதன் காரணம் யாது?

எதிலும் சந்தேகக் குணம் கொண்ட மானிடன் எந்தத் தலையைப போற்று வது, எந்தக் கையைப பற்றுவது என்ற எண்ணம் தோன்றி அல்லல் படக்கூடாதென்றே பாதங்கள் இரண்டோடு பக்தர் பற்றிக் கொள் ளுதற்கு ஏதுவாக, எழில் வந்த பிரா னுக அளபபரும் கருணை வள்ளலாக அனபர்கள இன்புற, திருவடி பற றிச் சரணடைய, இறைவன் திருவடி களே சரணம் எனக்கொண்டு திரு வடி போற்றி, திருவடி பற்றிக கொளள, இருவடி பற்றிக் கொள்ள திருவருள் தந்து காக்கவே இரண்டே திருவடியாகி இருபபதையும் உணர வேண்டாமோ?

மணிமேகலைக் காபபியமும்,

திமொழிக் கடைத்த செவியோய்நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி

என திருவடிப பெருமையைத் தான் சிறபபிக்கின்றது

"பரமன் பாதம் பணிந்தோர் தமக்குப
பற்றிய பாவம் யாவும்போம்"

என்பதில மாற்றமேதுமில்லை என உணர்ந்து இறைவன் பாதமே இனி யது—எல்லாம் தரவல்லது என்று ணர்ந்து அவனடி புகுவோம் ★



திருக்கழுக்குன்றம் — திரு. வி. முத்துராமன் - கோவை.

# ஆணிமாண்டவ்யர்

திரு கே நாகராஜன்—திருக்குணம்

தீவததில் சிறந்த மாமுனிவரான மாண்டவயர் என்பவர் ஒரு சமயம் தீர்த்த யாத்திரை சென்றுர் அப போது ஒரு நகரின் அருகில் தங்க வேண்டிவந்தது அங்கே அவர் தன்னு டைய பர்ணசாலையை அமைத்துக் கொண்டு தவம புரிந்து கொண்டு இருந்தார் அந்நகரத்து அரசனு டைய அரண்மனையிலிருந்து ஒருநாள இரவு திருடர்கள் களவாடிககொண்டு செல்கையில, அதனை அரண்மனைக் காவலாகள் கண்டு பின்தொடர கள்வர்கள் தபபி ஓடும்போது மாண் டவ்யருடைய பர்ணசாலையில் ஒடி ஒளிந்து கொண்டனர் காவலர்கள் மாண்டவ்யரே கள்வர் தலைவா என எண்ணி அவரை குரு திருடன் என்றும் உள்ளே பதுங்கியிருந்தவர்களை சிடத் திருடர்கள என்றும் கூறி மன்னர் முன் கொண்டு நிறுத்தினுர்கள் மன் னவர் மாண்டவயரை கழுவில் ஏற் றும் படியும், மற்றவாகளைக் கொலை செய்யும் படியும உத்திரவு போட டான் அதன்படி தண்டனையும் நிறைவேற்றபபடடது

மறுநாள் விடியறகாலையில் விண் வழியாகச் சென்ற முனிவர்கள் கழு வில் இருக்கும மாண்டவயரைப பார்த்து கீழே இறங்கி வந்து, மாண் டவயரிடம "தங்களைக் கழுவில் ஏற றியக் கயவன் யார்? தாங்கள் ஏன் அவனை சபிக்கவில்லை? தங்களின் கடைக்கண் சிவந்தாலே போதுமே கடல்கள் யாவும் கலங்குமே! மேரு மலையும் பொடியாகுமே! இது என்ன கொடுமை" என்றுர்கள் முனிவரும் பொறுமையாக "என் வினைதான் இதற்குக் காரணம்" என்றுர்

நளச்சக்ரவர்த்தியின் மகள் நளா யினியின் பெருமையை நாரதர் மூலம் அறிந்த மௌத்கல்யர் நளாயினியின் குணநலனையும் கற்பின் பெருமையை யும், உறுதியையும் சோதிக்கக் கருதி இளமை கோலத்துடன் வந்து இந்திர சேனை என்ற பெயருள்ள நளாயி னியை மணந்து கொண்டு பிறகு நோயும் தளர்ச்சியும் உடைய கிழ வடிவு கொண்டு அவளைச் சோதிக்கும பொருட்டு துனபுறுத்தினுர் தொழு நோயால் அவர் விரல் அழுகி அன் னத்தில விழுந்தது அவள் அதை எடுத்து விடடு அருவருபபின்றி அந்த எச்சில் அன்னத்தையும் உண்டாள் ஒரு போதும் அவர் கான அவர் உறங்கியதில்லை மாருத அன்போடு அவருக்குப பணிவிடை செயது வரும் நாளில், அவர் விரும்பியபடி அவரை ஒரு கூடையில் இருக்கச் செயது அவரைச சுமந்து கொண்டு தீர்தத யாத்திரை செயதாள்

ஒரு நகரத்தில் விலை மாதர்களது தெருவழியே செல்லும் போது எல் லோரும் நளாயினியைப பரிகசித் தார்கள் ஒரு இளம் பெண் மட்டும நளாயினியைத் தொழுது கற்பின் பெருமையையும் சிறபபையும் பாராட்டிக் கண்ணீர் சிந்தினுள் அன்று மாலை மௌத்கல்யர் தனக்கு அந்தக் கணிகையரிடம் காதல் ஏற் பட்டுள்ளது என்று கூற, நளாயினி யும் அவரைக் கூடையில் சுமந்து சென்று அக்கணிகையின் வீடடை அடைந்து அவளுக்குப பணிவிடை கள் செயது வேண்டிக் கொள்ள அவ ளும் இசைய மௌத்கல்யர் அக்கணி கைக்கு வேண்டிய வரங்களைத தந்து விடடு தான் நளாயினியை சோதிக் கவே வந்தேன் என்ற உண்மையைக் கூறி மீண்டும் புறபபடடுப பழயபடி கூடையில அமர்ந்து இருக்க நளா யினி திரும்பச் சுமந்து வரும் போது வழியில் கழுவில் தொங்கிக் கொண் டிருந்த மாண்டவயருடைய காலில் கூடையிடித்தது

அதனுல் துன்புற்ற அவர் "பொழுது விடிந்தால் உன் மாங்கல் யம் போம்" என்று சபித்தார் நளா யினியும் "இருளில் தெரியாமல் நிகழ ததற்கு இபபெரிய சாபம் தந்தது நியாயமா? உங்கள்மீது அலடசியம் கொண்டோ, வெறுபபு கொண்டோ இபபடி செயதேனில்லை அறியா மையின் மெத்தனமாக நடந்தோ, ஆனந்தத்தில் கண் மண் தெரியாமல் நடந்தோ இபபடி செயதேனில்லை" என்று கூறி "நான் கணவனைக் கடவு ளாகக் கருதியது உண்மையாயின் கதி ரவன் நாளை உதயம் ஆகமாட்டான்" என்றுள் மூன்று நாடகள் கதிரவன் உதிக்கவில்லை மூவரும தேவரும் வந்து வேண்டினுர்கள மாண்டவயர் "நீ தீர்க்க சுமங்கலியாய விளங்கு வாய்" என்று வாழத்தினுர் நளா யினியும் சூரியனை உதிக்கும்படிச் செயதாள்.

இவற்றை ஒற்றர் மூலம் அறிந்த மன்னவன் அஞ்சி நடுநடுங்கி ஓடி வந்து அவரை கழுவில் இருந்து இறக்கி கழுத்தில் இருந்த ஆணியை அரம் கொண்டு ராவினுன் அது ஐந்து விரற்கடை அளவு இருக்கும் போது முனிவர் சிவபூசைக்கு நான் மலர் எடுக்கும் போது "இந்த ஆணி மலர்க்கூடை மாடடப பயனபடும் ஆதலால் இது அபபடியே இருக்கட டும்" என்றுர் அரசனும் அபபடியே விடடு விடடு பணிந்து விடைபெற்று சென்று விடடான் இவர் கழுத் தில் ஆணியுடன இருந்ததால் இவரை ஆணி மாண்டவயர் என அழைக்கப படடார்

பின் ஒரு சமயம் இவர் யமனுலகம் போய் அறக் கடவுளைச் சந்தித்து 'இபபடிக்கு எனக்கு நோந்ததின் கார ணம் என்ன?' என்று கேடக, அதற்கு

(32 ம் பக்கம் பார்க்க)

# சரணம் விளித்தால் மரணம் இல்லை

7 'இடைவிடா சரணம்': மனதில் ஒரு கோரிக்கையுடன் காரிய ஸித்தி அடைய வேண்டியும், ரோக நிவாரணம் பெறக்கோரியும், மழை பெய்ய வேண்டியும், லோக க்ஷேமம் வேண்டியும் பலர் ஒன்று கூடி பல மணித்துளிகள், சில தினங்கள் இடைவிடாமல் இரவு பகல் தொடர்ந்து ஸ்வாமி சரண தாரக மந்திரத்தை ஜெபித்தலே இடைவிடா சரணம். இந்த இடைவிடா சரணத்தை உலக நலன் கருதி பலரும் ஆங்காங்கு பஜனை மடங்கள், தேவாலயங்களின் பிராகாரங்கள் போன்ற இடங்களில் ஒன்று கூடி ஒரு மஹா யக்ஞம் போல் நடத்துகின்றனர். இதற்கு முன் மாதிரியாக,

ஹரே ராம ஹரே ராம ராம ராம
ஹரே ஹரே |
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே ||

என்ற இராம நாம ஜப யக்ஞத்தைக் கொள்ளலாம்.

8 மௌன சரணம்: இதை 'த்யான சரணம்' என்றும் சொல்வதுண்டு. வாயிலிருந்து சப்தம் வெளியில் வராமல், இதழ்களைக் கூட அசைக்காமல் மௌனமாய் அமர்ந்து, மனத்தின் உள்ளேயே அய்யப்பனைக் கண்டு அவருக்கு சரணாஞ்ஜலி செலுத்துவதே மௌன சரணம் என்பது. இந்த மௌன சரணத்தினால் மனத்தூய்மை ஏற்படுகின்றது. இச்சரணத்தை எல்லா வேளைகளிலும் உச்சரித்து உய்யலாம். எந்த வேலையில் ஈடுபட்டிருந்தாலும், எத்தகைய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டிருந்தாலும் மனனம் செய்யலாம்.

உதாரணம் 'ஸ்வாமியே சரணம்.. சரணமய்யப்பா'

9 மன்னிப்பு வேண்டும் சரணம்: பூஜையின் முடிவிலும், சரண கோஷங்கள் கூப்பிட்ட பிறகும், எந்த தெய்வ ஸந்நிதியிலாயினும் அய்யப்ப பக்தன்மார் இந்த மன்னிப்பு சரணத்தை வேண்டிய பிறகே பூஜையையோ, பஜனையையோ முடிவுற்றதாக எண்ணுதல் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

"அறிந்தும் அறியாமலும், தெரிந்தும் தெரியாமலும் செய்த ஸகல குற்றங்களையும் பொறுத்துக் காத்தருள வேண்டும் ஸத்தியமான பொன்னு பதினெட்டாம்படிமேல் வீற்றிருந்து காசி ராமேஸ்வரம் பாண்டி மலையாளம் அடக்கி ஆளும் ஓம் ஸ்ரீஹரிஹர ஸுதன் ஆனந்த சித்தன் அய்யய்யப்ப ஸ்வாமியே சரணமய்யப்பா"

இவ்விதமாய் சபரிமலை நாதனை பக்தர்கள் தமக்கு உகந்த முறையில் சரணம் விளித்து நற்பயன் அடைந்துள்ளனர்.

சரணம் விளித்தால் மரணம் இல்லை என்று சொல்லக் கேட்டு எவ்வளவு சரணம் போட்டும், பாட்டுப் பாடியும் எங்களுக்கு இந்த கஷ்டங்கள் தீரவில்லையே! என்னும் குரல் மேலோட்டமாகக் கேட்கின்றது. அதற்கு மேற்கோளாக இச்சிறு நிகழ்ச்சியை நோக்குவோம்.

பச்சிளம் குழந்தை ஒன்று தன் தாய் தன்னருகில் வந்து தன்னைத் தூக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையில் அழவாரம்பித்தது. சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த அக்குழந்தையின் தாய், குழந்தை அழுவதைக் கவனித்து அருகில் வருவதற்குள் குழந்தை அழுவதை விட்டு விளையாட ஆரம்பிக்கவே மீண்டும் தனது வேலையில் ஈடுபட்டாள். சிறிது நேரம் சென்றதும் குழந்தை மீண்டும் அழ ஆரம்பிக்கவே அதன் தாய் அக்குழந்தையிடம் சில விளையாட்டுப் பொருள்களைக் கொடுத்தாள். பொம்மைகளைக் கண்ட அக்குழந்தை அதன் பால் ஈர்க்கப்பட்டு அழுவதை நிறுத்திப் பொம்மைகளுடன் விளையாடத் துவங்கியது. அது கண்டு தாய் தன் வேலையைத் தொடர்ந்தாள். பொம்மைகளுடன் விளையாடி அலுத்துப் போன குழந்தை தாயின் அணைப்பை எண்ணி அழத்துவங்கியது. அப்பொழுது அக்குழந்தையின் தாய், அதன் அண்ணனையோ, அக்காவையோ குழந்தையை எடுத்து விளையாட்டு காண்பிக்கும்படி கூறினாள். அவர்களுடன் கலந்து விளையாடி சிறிது நேரம் தாயை மறந்திருந்த குழந்தை மீண்டும் அந்த நினைவு வந்து அழ ஆரம்பித்தது. இம்முறை அதன் குறி தாயின் அணைப்பே என்று உணர்த்தும் வண்ணம் வேறெந்த பொருளையும் விரும்பாமல் அடம் பிடித்து அழவாரம்பித்தது.

திரு S சந்திர மௌலி,
திருப்பதி

அதன் குரல் சிறுகச் சிறுக உயர்ந்தது. எப்படியாவது தாயின் மடியை அடைந்தே தீருவது என்ற உறுதியில் ஓ வென்று உச்சஸ்தாயியில் கதற ஆரம்பித்தது. சேயின் உண்மையான கதறலை உணர்ந்த அத்தாய் தன் கை வேலையை அப்படியே போட்டு விட்டு ஓடோடி வந்து குழந்தையை மார்போடணைத்து உச்சி மோந்து ஆறுதல் மொழிகளால் அதன் துக்கத்தை மாற்றினாள்.

இந்த உதாரணத்தில் குறிப்பிட்டுள்ள பச்சிளம் குழந்தையைப் போன்றவர்களே நம பக்தர்கள தாயைப் போன்றவர் பகவான் ஏதோ சரணம் போடுவதென்பது மாலை அணிந்தவர்களின் கடமை என்ற நோக்கில், காலை மாலை வேளைகளில கடகடவென்று சரணம் சொல்லி முடித்துவிட்டு இதர அன்றாட வேலைகளில ஈடுபட்டு விடுவர் அப்படிச் சரணம சொல்லும சில நிமிடங்களாவது மனதை ஒரு நிலைப்படுத்திச் சொல்வார்களா என்றால் அதுவும் கிடையாது வாய மாத்திரம் சரணங்களை இரைந்து கூவி வந்தாலும் மனது இனம தெரியாத பல எண்ண அலைகளில், விஷய வாசனைகளில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கும் இவர்களுக்கு கண்டிப்பாய கடவுள் அருள் பெற்றே தீருவதென்ற எண்ணமோ அதற்கான முயற்சியோ இல்லாமற் போவதால் கடவுளும் விலகியிருந்து நோக்கியபடியே வாளாவிருந்து விடுகின்றார் இது குழந்தையின் முதல் நிலை

இன்னும் சில பக்தர்கள் முன்னவர்களைக் காட்டிலும் சற்று மேலானவர்கள் இவர்கள் இறைவனிடம் அடிக்கடி வேண்டிக் கொண்டே இருப்பார்கள் கடவுளும அவர்களது கோரிக்கைகளுக்குச் செவி மடுத்து, அவர்கள கோரும் விளையாட்டு பொம்மை போன்ற கோரிக்கைகளை நிறைவேற்றி விடுவார் அத்துடன் அவர்களது பரார்த்தனை லக்ஷ்யம் முடிந்து விடுகின்றது நிறைவேறிய பிரார்த்தனைப் பலனில திளைத்த வண்ணம இருந்து விடுவா அவர்கள

இனி மூன்றும நிலை பக்தர்களைக் காணபோம் இவர்களின் கோரிக்கைகள உடனுக்குடன நிறைவேற்றப்பட்டாலும தொடர்ந்து, கடவுளை தியானித்து, அவன் புகழ பாடிக் கொண்டேயிருப்பார்கள்

இவர்களுக்கு இன்னும கொஞ்சம அதிகமான சலுகைகளைக் கொடுத்து பரீட்சிப்பார் கடவுள் புத்ர புத்ரி கா வயா மோஹம, 'தாம்பத்ய வியா மோஹம்', ஸ்வஜன வயா மோஹம, தன வயா மோஹம போன்றவற்றை ஏற்படுத்தி, பக்தனை உழலவிட்டு இவற்றையெல்லாம் கடந்து தன்னை எப்படி வந்தடைகின்றான் பார்க்கலாம் என பரீக்ஷித்துக் கொண்டேயிருப்பார்

ஸாக்ஷாத் பரமாத்மாவாகிய கண்ணபிரானின் உற்ற நண்பனும் மஹா வீரனுமான அர்ஜுனனே யுத்த ரங்கத்தில் தனது உற்றார் உறவினர்களை எதிரிகளாகக் கண்டு கதி கலங்கி, மதி மயங்கி, ஸ்வஜன வியா மோஹத்தில காண்டீபத்தை நழுவவிடவில்லையா?

இனி ஜட பரதன் முற்றும் துறந்து பிரமமத்தைக் குறித்துத் தவம் செய்ய கானகம் வந்து, ஆசிரமத்தில வசிக்குமகால ஒரு மான் குட்டி அங்கு வந்து சேர அதனமீது அன்பு கொண்டு வளாத்து வந்தான் அள வற்ற பாசத்துடன வளர்த்த மான் குட்டி இறந்துவிட அதனமேல் வியா மோகத்தை வளாத்துக் கொண்டிருந்த ஜட பரதன் அதன் நினைவாகவே உயிர் நீத்து மறுபிறவியில் மான் குட்டியாகப் பிறந்த கதை நாமறிந்ததே

இவ்விதமாய நமக்குண்டாகும் வியா மோஹங்கள கணக்கிலடங்கா- இவற்றை ஈடு செய்ய நாம எத்தனை ஜென்மங்கள் எத்தனை பிறவிகள் எடுக்க வேண்டுமோ என எண்ணிப் பார்த்தால் மலைப்புதான் மிஞ்சும்

இத்தனை விதமான வயா மோஹங்கள் எனனும போர்வையால மூடப்பட்டு அதனுள் ஆசாபாசங்களால சூழப்பட்டுச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும் நம்மை, பாவம் அந்தக் கடவுள் காப்பாற்றியே தீருவது என்று நல்லெண்ணம் கொண்டவரா யினும அவர் கண்களில் இத்தகையோர் பட்டால் தானே

கோரிக்கைகளிலும, வியா மோஹங்களிலும், ஆசாபாசங்களி

ஓம சப்த விக்னேஸ்வராய நம:
ஓம ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்

எல்லாம நன்மைக்கே! எல்லாம் நல்லதே நடக்கும்! என்று அசையாத நம்பிக்கையுடன் இந்த புனித ஸ்லோகம் எழுதி, ஓம் வேத ஒளி'' பட்மும, புனித பிரசாதமும் பெற்று, பலன் அடைந்தவர்களும், பல கஷ்டங்கள நிவர்த்தியானதும், உத்தியோகம், பதவி உயர்வு கிடைத்ததும், நல்ல இடத்தில் விவாகம அமைந்ததும், உடம்பு குணமானவர்களும், கல்வி தேர்ச்சி பெற்றவர்களும், வியாபாரம், தொழில் செழிப்படைந்ததும், எல்லாம்

"ஓம வேத ஒளி"

"ஓம ஸ்ரீ காஞ்சி ஓம காமகோடி ஓம தெய்வம"

**"ஓம் சந்திரசேகரேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம:"**

FOR EVER அவருடைய பரிபூர்ண அனுக்ரஹத்தாலும், அருள ஆசியாலும்தான் FOR EVER என்று வேண்டி, விரும்பி தெரிவித்துக் கொள்கிறேன் இதில், FOR EVER நான் என்று FOR EVER இல்லை FOR EVER.

தங்கள் அன்புள்ள

**B. R. மகாலிங்கம்**

லும் ஈடுபடுக கலங்கித்தவிக்கும் சித்தத்தில், சுத்த ஸதவ ஸ்வரூப ஞன ஆண்டவனின் நிரமல ரூபததை பிரதி பலிககச் செயவதெவவாறு?

இக்கால நிலையில குறைந்த பக்ஷம் நாம செயயும் பூஜை, பஜனை, தியானம், சரணம விளி போன்ற சமயங்களிலாவது மனதை ஒரு நிலைபபடுததி வேண்டிஞல் அதுவே பெரும் பயனைத தரும்

சலனமில்லா நீரில சூரிய பிமபம் அழகாகத் தெரிவது போல கலக்கமில்லா நிரமல சிததத்தில இறைவன பரதி பலிபபார் என்பது உறுதி

இனி தாயினமடி தவிர வேறெதும வேண்டாமல விக்கி, விக்கி அழும் குழந்தையின் நிலையிலுள்ள பக்தர்களின் நிலைமையை நோக்குவோம் இவாகளுக்கு பரமனின் ஸன்னதி தவிர வேறு எந்த நிதியினமீதும் நாட்டமிராது இவாகளை எந்த வியா மோஹமும் கட்டுபபடுத்தாது இவர்கள் ஆசையைத் துறந்தவர்கள் வாழ்க்கையை தாமரை இலைத் தண்ணீர் போல வாழநது கொண்டே 'பற்று அறறு பற்று' எனும் முறையில் தமக்கிட்ட பணியை விருபபு வெறுபபினறிச செயது கொண்டே ஸதா சித்தத்தை சிவத்தில் லயிக்கச் செயது, முக்தி பெறறே தீருவது என்ற குறியுடன் ஸவாமி சரண நாம ஜபத்தை கணக்கிலடங்கா எண்ணிக்கையில, இறுதி மூச்சுள்ளவரை உச்சரித்த வண்ணமே இருபபர் உறக்கத்திலும இவவுணாவு இவாகளைவிட்டு விலகா இவர்களின் சொலலும செயலும் தரும நியாயங்களுககுக கட்டுபபட்டதாய இருக்கும்

' அன்யதா சரணம நாஸதி த்வமேவ மம |
தஸ்மாத் காருண்ய பாவேன ரக்ஷ ரக்ஷ மஹாபரபோ ||''

என்று தனது ஸர்வேந்த்ரியங்களாலும் மன பராணங்களாலும் பகவானுக்குக் கைங்கர்யம் செய்து மனே வாக் காய கர்மஜங்களால அவனடியே பணிந்து, அவனையே சரணம வேண்டி, அவன மலாப பாதஙகளை விடாமல் உறுதியாய பறறி நிறபா

அபபடிபபட்ட பகதாகளே சேயின வீரிட்ட குரல கேட்டு அதன தேவையை உணர்ந்து விரைந்து வநது வாரியணைத்து உசசி மோந்து சீராட்டி பாலூட்டி சேயை ஆட்கொளளும் தாயைப போல பகவான் பக்தனின் குரல் கேட்டு ஓடோடி வந்து அவர்களை ஆட்கொணடு அவா குறை தீர தனது மடியிலிட்டு அணைத்து பரமானநதத்தைத் தரத தயங்க மாட்டார் என்பது சான்றோர் கருத்து

ஆகையால் கேசவா! உனது வயிற்று நோய தீர்ககவல்ல அரு மருந்தாக ஸவாமி சரணம் எனற தாரக மந்திரத்தைத் தருகிறேன இம்முறை நீ சபரிமலை யாததிரை சென்று, ஐயபபன் சன்னதி முன் நின்று காலை முதல உன் வாயிலிருந்து எத்தனை வாரத்தைகள் வருமோ அத்தனையும் 'ஸவாமி சரணம்' என்ற வார்ததைகளாகவே சொல்லி வா; உன நோய ஸ்வாமி சரண நாம ஜபததால் பரந்தோடி விடும் நன்மையே நடக்கும் சென்று வா!'' என்று நாராயணி அமமாள் கேசவனை வாழத்தி அனுபபினர்

நாராயணி அம்மாளின கூற்றையே வேத வாககாக எண்ணிய கேசவன தனது குருவின மூலமாக மாலை அணிந்து முறையே விரதமிருந்து சபரி மலையை அடைந்தான்

மறுநாள காலை இருள் அகலு முனபே எழுநது பஸ்மக் குளத்தில் குளிதது நீரணிந்து தனது குரு நாதரை வணஙகி ஆசி பெற்று கலியுகக் கடவுளாம் சபரிமலை நாதன் திருச்சனனிதி முன் வாயிலுக்கருகில் நின்று மனம் கசிந்து, மெயயுருகி, தீஞரீ நாதத்தில் 'ஸவாமி சரணம்! சரணம் பொன்னய்யபபா! ஸவாமி இலலாமதாரு சரணம ஐயபபா! ஸ்வாமியே சரணம சரணம' என்று இடை விடாமல் தனது நோய தீர வேணடும், அயயபபன் அருளைப பெற வேண்டும என்ற குறிககோளில குரலை இறைஞசலாக்கிச் சரணங்களை சரமாரியாக உசசரிக்கவாரம்பிததான்

நேரம் செலலச செலல அவனது குரலும கூக்குரலானது சுறறி நின்று சற்று நேரம் பாாத்து நின்றவர்களும அலுபபடைந்து தத்தம் பணிகளைப பாாக்கச் சென்றனர் ஆனுல் கேசவன் மட்டும் அலுபபினறிச சரணங்களை முழங்கிக் கொணடே இருந்தான

நேரம நகர்நதது

காலை புலாநது பகலாகி, மதியம வந்து, மாலையாகி, அந்தி மறைந்து இருளும் சூழந்தது கேசவனிடம் சரணங்கள மாத்திரம் நிற்கவே இலலை ஆனுல் குரல வளம் குறைந்து மெலிதாக ஒலித்து வந்தது

அந்நிலையில் கேசவன் மிகவும் களைபபடைந்து சிறுகச சிறுக உணர் விழுந்து தரையில் வீழந்தான

அபபொழுது யாரோ தன் பெய ரைக் கூபபிட்டு, தன்னை தட்டி எழுபபுவதை யுணர்ந்த கேசவன் தன் எதிரில் உடல் முழுதும் விபூதி சந்தனம் அணிந்து, கழுத்தில் ருத் ராக்ஷ மாலையுடன தும்பைப பூ போன்ற வெண் தாடியுடன சிவ தேஜஸ நிரம்பிய முதியவர் ஒருவர் ''எனனபபா! உனக்குத் தீராத வயிறறு வலியாமே? இது அயயப பனை அபிஷேகம செயத நெய இது னுல் தீராத கரும வயாதியும் உண்டா? இந்தா வாயைத்திற! இது சபரிமலை பஸமம் இதைவிடச் சிறந்த ஔடதம் பிறிதொன் றுண்டா?'' என கேசவனின் வயிற் றைச சுற்றி நெயயைத் தடவி வாய் நிறைய கம கமவென்று வாசனை அடிக்கும் விபூதியை இட்டார

(27 ம் பக்கம் பார்க்க

# ஸ்ரீ சங்கர விஜயம்



திரு என் நடராஜன்—கோல்மூரி

பாரெங்கும் புகழ்பெற்ற பாரதநாட்டில்
சீரோங்கும் கேரள தேசபபகுதியில்
ஊரொன்று உண்டு காலடியென்று (அங்கு)
உத்தமர் சங்கரர் தாயதந்தையினர்
சிவகுரு என்னும் சிவபக்தரவரும்
அவர்தம் மனைவி ஆர்யாம்பிகையும்
மக்களில்லாக்குறை மனதில் நினைந்து
முக்கண்ணன் ஈசனை உருகித்துதித்தனர்

ஈசன் இரங்கினன் இத்தம்பதியின் மேல
நேசன் சங்கரனே உதித்தான் அவர்பால்
பெற்றோர் மகிழந்தனர் பேரின்ப மெயதினர்
உற்றார் உறவினர் உவகை எயதினர்
பரம்பொருள் அம்சமே உருக்கொண்ட சங்கரர்
நிரம்பிய தேஜஸுடன் விளங்கினரங்கே
மூன்றும் வயது முழுதும் நிரம்புமுன்
சான்றோன் சங்கரன் பாஷை பல பகர்ந்தான்
ஐந்து ஆண்டுகள் கடக்கும் முன்னமே
மைந்தனும் கற்றான் சாஸ்திரங்கள் தனையே

இந்த நிலையில தந்தை சிவகுரு
மைந்தனை விடடு மண்ணுலகு நீத்தார்
தனித்து நின்ற தாய ஆர்யாம்பிகை
தனயன் தனக்கு தாயுமானாள் தந்தையுமானாள்
உரிய காலத்தில் உறவினர் உதவியால
உபநயனம் செய்வித்து உள்ளம் மகிழ்ந்தாள்.
வேதாபபியாசம் விதிபபடி செயய
வேண்டிய பலபபல வசதிகள செய்தாள்

மாதாவே தெய்வமென மதித்தார் சங்கரர்
வேதாகமங்கள் விளக்குவததுவே
அன்னையிடம் சங்கரர்க்கு அளவற்ற அன்பு
அன்பினால் அவர் செயத அற்புதங்கள் அனந்தம்
நோய வாயபபடட தாயவள் நதிககு
போய வர இயலா பபொழுதினிலங்கே
ஆறதைத்தன் இல்லத்தின் அருகேவாவென
ஆணையிடடார் அன்னைக்கு உதவ
செல்வனின் ஆணைக்கு செவி கொடுத்தது நதி
தெள்ளன ஓடியது வீடடு வாசலிலே

குருகுலவாசம் செயயு மன்னாளில்
ஒரு சிறு சமபவம் நிகழ்ந்தது கேளீர்
அந்தணர் ஒருவர் அவர் பரம ஏழை
உஞ்சவிருத்தி மூலம் உயிர் வாழ்ந்து வந்தார்
பிரம்மசரிய தர்ம முறைபபடி
நிர்மல சங்கரர் பிக்ஷை வாங்க
அவரில்லம் போந்தார் பிக்ஷாந்தேஹி யென
அந்தணரபபோ அவவிடம் இல்லை
அவர்தம் மனைவி கேடடாள் குரலை
அவசரமாகவே அகமெங்கும தேடினாள்
பிக்ஷையளிக்க பக்ஷணம் ஒன்றும்
தக்ஷணம் காணாது தவியாய த்தவித்தாள்
நெல்விக்கனி யொன்று கையிற் கிடைத்ததை
மெல்லியள் அன்புடன் இடடனள் பிக்ஷையாய

அயயன் கண்டார் அவள்தன் அன்பை
மெய்யான கருணை மிகக்கொண்டான் உடனே
அந்தணர் தம்பதியை ஆட்கொண்ட வறுமை
அபபொழுதே போக்கிட ஆர்வம் மிகக்கொண்ட
மனதிலே நினைந்தார் மகாலெக்ஷ்மியை
கனமதே சொரிந்தார் "கனகதாரா ஸ்தோத்திரம்"

தங்கக்கனிகள் பொழிந்தன அங்கே
பொங்கியது செல்வம் பொலிந்தது இல்லம்

மகனுக்கோர் மணம் செயவித்துமகிழ
மனதிற்கொண்டாள் மாதா ஆர்யாம்பிகை
சங்கரரோ வெனில் சன்யாசம ஏற்க
சந்தர்ப்பமொன்றை சடுதி கைக்கொண்டார்
தாயும் மகனும் தனி நீராடுகையில
சேயின் காலையோர் முதலை பிடித்தது
அலறினள தாயும அழுது துடித்தாள்
பதறினளங்கே பயம் மிகக்கொணடு
'சன்யாச ஆச்ரமம் நானேறக நீங்கள்
சம்மதம் தந்தால் சங்கடம் தீரும
கவலைபபடாதீர் கண்ணீர் விடாதீர்
முதலையின் வாககிது முடிவைச் சொல்லுவீர்'
எனபபகர்ந்தார் இளைஞர் சங்கரர்

''அபபா மகனே அருமைசசெல்வமே
இபபோ உனை நான் எபபடிப பிரிவேன்
உன்னைத்தவிரவே உற்றதோர் மகனுண்டோ
தன்னந்தனியாய தவிததிட விடாதே''
என்றிபபடி வருநதினள் ஏங்கியே தாயும்
ஒன்றிய தாயின சொற கேட்டு சங்கரர்
''வருந்தாதீர் அம்மா வேறுமகன் இல்லையென
அருந்தவபபயனெதுவும் அவலமேயாகாது
அன்னைக்குரிய அந்திய கருமங்களை
நேம முறைபபடி நிச்சயம் செயவேன்
சன்மார்க்க வழியில் சன்யாஸம் ஏற்க
சடுதியிலெனக்கு விடை தந்திடுவீர்''
எனவே புகல மனமிளகி த்தாயும்
புத்திரன் பிழைத்தால் போதுமென்றெண்ணி
சம்மதம் தந்தாள் சன்யாஸம் ஏற்க

நர்மதை நதிக்கரையில் மலைக்குகையொன்றில்
நற்றவமிருநதார் ஸ்ரீ கோவிந்தபகவத்பாதர்
நாடினரவரை நலமிகு சங்கரர்
நற்குருவாகவே ஏற்கும் எண்ணத்துடன்
சற்குரு சங்கரர் சமீபம் செனறார்
நிஷ்டையிலிருந்தார் இஷ்டகோவிந்தர்
விரைவாய நர்மதையில் வந்த வெள்ளமது
விழுங்கியே சென்றது வெகுவாய கிராமங்களை
வெள்ளத்தை யுடனே வேகமாய கடத்தில்
உள்ளடக்கினர் உத்தமர் சங்கரர்

அபாயம் நீங்கிய ஆனந்தக்கூத்தில்
ஆரவரித்தனர் அக்கிராமவாசிகள்
நிஷ்டை கலைந்து நோக்கிய கோவிந்தர்
சிரேஷ்டன் சங்கரன் நிற்கக்கண்டார்
உணர்ந்தாரவர் மகிமை உள்ளம் மகிழ்ந்தார்
உவகையுட னவரை ஏற்றார் சீடனாய்.

காசியில தங்கியகாலையில் சங்கரர்
நேசமுடன் சீடருககு நித்தியமங்கே
ஆத்மஸ்வரூப தததுவமடங்கிய
உபநிஷதங்களை உபதேசித்தார்
கஙகையிலொருநாள் நீராடிவந்த
சங்கரரெதிரில் சண்டாளனொருவன்
நான்கு நாயகளுடன் நண்ணியே வநதான்
ஆங்கவா அவனை விலகிபபோ என
உரக்கக்கூறிட உரு சண்டாளன்
''உமதுபதேசம் அந்தோ பரிதாபம
சொல்லினிலின்றி செயலில் காணேன்
நல்லது நல்லதென'' நகைத்தானவனே.

அவன சொல் கேட்ட ஆசசாரியர் சங்கரர்
அபபொழுதேயஙகு ஐந்து ஸலோகங்களாம்
மனீஷா பஞ்சகமெனும் மகாமந்திரத்தால்
வேதாந்த தத்துவமதை விளங்கவைத்தார்
அதுகேட்ட சண்டாளன் அக்கணம் மறைந்தான்
அனுக்ரஹித்தான அவர் முன் காசிநாதனாய
ஆதிசங்கரரிடம் அதிபக்தி கொண்டவர்
வேதியர் ஸநநதர் எனுமொரு சிரேஷ்டர்
அவர்தம் மகிமையை அயலார் அறிய
நிகழ்ந்ததோர் சம்பவம் நீவிரதைக்கேளீர்.

நீர்பபிரவாகம் நிறைந்த கங்கையின்
அக்கரை நின்ற அந்தணர் ஸநந்தரை
அழைததார் சங்கரா தன்னிடம வரவே
தயக்கம் கொள்ளா ஸநந்தர் ஆற்றில்
இறங்கி நடநதார் இறைவன் ஆக்ஞைபபடி.

தாமரை யொவவொன்று அவர் தடம் தாங்கி
தாண்டி வரச்செயதது தவ் சிரேஷ்டரை
அவர் குருபக்தியை அகமகிழ்ந்து போற்றி
பத்மபாதர் எனபபட்டம் சூட்டி த்தன்
உத்தம சீடனாய ஏற்றார் சங்கரர்

பிரம்ம சூத்திர பாஷ்யம் இயற்றி
பிரவசனம் செயத வந்தகாலையில்
விருத்த பண்டித வேடத்திலொருவர்
தோன்றினர் சங்கரர்முன் துளைத்தா கேள்விகளால்
எட்டு தினங்களவர் திட்டமுடன் வாதிட்டார்
வெற்றி தோல்வியெதும் சற்றும் காணமல்
வாதிட வந்தவர் தான் வியாசபகவானென
ஆதி சங்கரர் பாஷ்ய மதை அவர் மிகபபாட்டி
பதினறு வயதின்னும் தந்தேன் உனக்கெனவே
ஆசீர்வதித்து அகமகிழ்ந்து மறைந்தார்.

திக் விஜயம் செயத திருமுனி சங்கரர்
திகழ் உயர் சீடர் சிலபேருடனே
கர்ம மார்க்கத்தை கனதிவிரமாய்
கையாண்டுவந்த மண்டனமிச்ரர்

மினிர்ந்த படடணம் மாகிஷ்மதிக்கு
வந்து அவருடன் வாதுக்கு சசென்றுர்
சாக்ஷாத சரஸ்வதி தேவியே யங்கு
ஸரஸ வாணி யெனும் சாபபெயர் கொண்டு
மண்டன மிச்ரரின் மனை விளக்கவளும்
ஈண்டிவா வாதத்தை கண்டு களித்தனள
வேண்டினர் அவளை நியாயம் வழங்கி
வெற்றி தோல்வி விளித்து கூற

தன்னிலையறிந்த தேவியவளும்
உனனிபபாாத்து ஒருவழி செயதாள
மங்கையிரண்டு மாலைகள் கொணாநது
அங்கவரிடம் அளித்து சசொன்னுள்
"மலாமாலை தனையே மாாபிலணிந்து
புலவா நீவிர் தொடங்குவீா வாதம்
தோற்றவர் மாலை துவண்டு வதஙகும்
ஏறபோம் அதனை இறுதி முடிவாய"

மதிவாணரிருவரும் மனமுவநதஙகே
விதிபபடி வாதம் வெகுநாள நடததினா
மண்டன மிசரரின் மாலை வாடியது
கணடனள ஸரஸ வாணியுமதனை
"எந்தன கணவனுக்கு யானே அடிமை
என்னையும் ஜெயிபபது உம்முடை க்கடமை
அதில நீர் தவறினுல் அவரை வென்றது
மதிக்கத்தகாதென" மாதவள் உரைத்தாள
சம்மதம் என்று சங்கரா சொல்ல
ஆரணங்கு வாதிக்க ஆயத்தமானுள

ஆசசாரியார் சிறுதும அறியாததர்மம்
கிரகஸ்தாசிரமம் எனபதை பபற்றி
விரைவில் வெகுவாய வினவலானுள
அதைக்கேடட சங்கரர் அவ்வணங்கிடம
ஆறு மாதத்தவணை அளிக்க க்கேடடார்
நேரிழையாளும் நோமையாகவே
பார்புகழ சங்கராககுப பதிலளித்தாள சரியென

மத்திய தேசததின மனனன் அமருகன
மண்ணினை நீககி விண்ணகம் சென்றுன
மன்னன் உடலில் தம்முயிர் செலுத்தி
தானிதுவரை அறியாதிருந்த
தருமம் மிக்க கிரகஸ்தாசிரமத்தை
ஏற்றிட நினைத்தார் எம்குரு சங்கரர்

சிறியதொரு குகையில் சீடர்களிடையில்
தன்னுடல் விடடு மன்னனுடல் புகுந்தார்

மன்னன் எழுந்தான் மககள் மகிழந்தனர்
படட மகிஷியும பரமானந்தமடைந்தாள
திடடமுடன நாடு செழித்தோஙகவே
மாதம மும்மாரி மழை பொழிநதது
தேசமககள திருவளங்கணடார்
நேசம மிககொண்டு களிபபுறறு வாழநதனர்
மகான் வரவினுல மாறிய நிலைமையதை
மன்னன மனைவி மனதிலே யுணாந்தாள்

எண்ணினுளவள் இருததிக்கொளள
புனிதமகான புகுநத புதிய அரசனை
விடுததாள் கடடளை வேலைக்காரருக்கு
எடுததுககொளுத்தவே யாாசடலம கண்டாலும்
கடடளை மேற்கொணட காவலாவாகளும
கைபபறறினர் குகையில் சங்கரர் சடலம்
பதறினா சீடர் விரைந்தன ருடனே
பரமகுருவிடம நடநததைச சொலல
அரசன் சஙகரர் அரண்மனைதனிலே
அரசியுடனமர்ந்து அவளகை த்தாமபூலம
உவகையுடனே உணடிட விருந்தார்
உடனங்கு வந்த உத்தமச் சீடர்கள
சங்கேத பாஷையில் சபதம் கொடுத்தனர்

ஆங்கதைககேடட அமரர் சங்கரர்
அரசன் உடலை அக்கணம் நீததாா
அலறினுள் அரசி அரசன் மாளவே
இஙகிது இவவாறு இருந்த காலையில்
சங்கரா சடலத்தை க்கவர்நத காவலா
சடடென சசதையில் இடடனர் அதனை
திடடமுடனதற்கு ததீயும் வைத்தனர்
கரஙகளிரண்டும கனிந்து எரிகையில்
சஙகரர் தனனுவி தன்னுடல் புகுத்து
லக்ஷ்மீகாநதன் நாரணனை நினைநது
"லக்ஷ்மீந்ருசிமம மமதேஹி கராவலம்பம்"
எனும் எழில ஸலோகங்கள எணபதினேழினுல்
புகழபெற த்துதிததார் புண்ணியர் சஙகரா
தோத்திரம கேடட நாரணன் உடனே
சாததிரமறி சங்கரா தனனை த்தழுவினுன்
கருணுமூர்த்தியின கைபடட மாத்திரம்
அருணுேதயம போல திகழந்தார் சங்கரர்
எரிந்த கைகள பொலிந்து விளங்கின
எம்பெருமான் மகிமையை எலலோரும் உணர்ந்
தனர்.

(தொடரும்)

23-ம் பக்கத் தொடர்ச்சி

இது கனவா! நினைவா என்று ஊகிக்க முடியாமல திடுக்கிட்டு எழுந்து நின்ற கேசவன் சுறறு முற்றும் நோக்கினுன தன்னைத தவிர அத்தனை பக்தர்களும், நடந்து வந்த களைபபு தீர அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தனர் சரி கனவுதான் என்று முடிவுககு வரலாமென்றல வயிற்றிலிருந்து நெய கசிந்து கொண டிருந்தது வாய விபூதி வாசனையில் கம கமத்தது சற்று முன் தோன றிய முதியவரின் முகத்தை ஞாபகப படுத்துக் கொண்டு, படுத்துறங்கு வோர் முகங்களை எல்லாம் நோக்கினுன கோயிலைச் சுற்றிச் சுறறி வந்ததுதான் மிச்சம் மிகவும் பர வசமான நிலையில் குருநாதரைக் கண்டு அவரை நமஸகரித்து நடந்தது அனைத்தையும் கூறினுன்

அபபொழுதே ஏகாந்த ஸேவை முடிந்து கிடைத்த பிரஸாதமான அரவண பாயஸத்தை கேசவனுக்குக் கொடுத்து உண்ணச் செயதார அவ னது குருநாதர்

அதுவரை எபபடிபபடட அறு சுவை உண்டியாயினும் வயிற்று வலி காரணமாய எட்டிக்காய போல் தோன்றிய கேசவனுககு அந்த வேளை யில் குருநாதர் கொடுத்த பிரஸாதம் தேவாமிருதமாய இருந்தது

"கேசவா! உன் பிரார்த்தனை அவ னது கவனத்தைக கவர்ந்துள்ளது: உனது கோரிக்கை நிறைவேறியது வந்தவர் வேறு யாருமல்ல ஸாக்ஷாத் ஸ்ரீ அயயபபனே! இன்றேடு உன் வயிற்று வலி தீர்ந்தது எல்லாம் ஐயபபனின் கருணை" என்றுர் கேச வனுடைய குருநாதர்

அன்று முதல் கேசவனுக்கு வயிற்று வலி வரவே இல்லை நாட்கள் மகிழ வுடன் நகர்ந்தது கேசவன் தொடர்ந்து சபரிமலை யாத்திரை சென்று வந்து கொண்டிருந்தான்

அந்நிலையில் கேசவனது ஊருக்கு மீண்டும் கிருஷ்ண சாமா அவாகள வருகை தநதார் கேசவன் ஓடோடிச சென்று அவர் காலகளில வீழந்து வணங்கி, தன்னை யாா என்று அவ ருக்கு விளங்க வைத்து, அவர் மூல மாக தன்னுடைய கரும வியாதியை தெரிந்து கொணடு, நாராயணி அமமாள் அவர்களின் கூற்றுபபடி ஸவாமி சரண நாம மகிமையால் அயயபபன் கருணைக்கு இலக்காகி தன் கரும வியாதி நீங்கப பெறற விதத்தைக் கூறி தனனை ஆசீர் வதிக்க வேண்டினுன்

கிருஷண சாமாவும கேசவனை "நோயற்று நீடுழி வாழ வேண்டும்" என மனப பூாவமாக ஆசீர்வதித்து அனுபபினுர்

அன்று பூஜையில் கிருஷ்ண சர்மா விறகு மனம் அலைபாயவாரமபித தது நாராயணி அமமாள் கிருஷ்ணசர்மாவின் சிஷயை தான் அவர் கூறியபடி கேசவ னுக்கு கரும வியாதி குணமான தில் அவருக்கும் மகிழ்சசிதான் அதே சமயம் தன் கூற்று பொயத்து விடடதே இது கரும வியாதி அனு பவித்தே தீர வேண்டும் என ஐயப பனே கூறியதாகத் தான் கூறிய பதம் இன்று பொயத்து விடடது கேசவனது பிணி நீஙகிவிடடது இனி தான் எனன கூறினுலும் நம்பு வார் யார் எனப பலவாருக எண் ணியபடி ஒருவாருக பூஜையை முடித்துக் கொண்டு ஏகாந்தத்தில் அயயனிடம் "ஐயபபா! என் பூஜை யில் ஏதாவது குறறங் குறைகளைக் கண்டு தேவரீர் என மேல் கோபம் கொண்டு என்னை இபபடிப பொய யனுக்கினீரோ? இபபடி என் கூற்றை பொயயாக்கி விடுமளவிறகு யான் தாங்கள்பால செயத குறறமென் னவோ? தெரிந்து கொள்ள விழை கிறேன்" என்று வினவினுர்

அதற்கு அய்யபபன் புன்னகை யுடன் "நீ என்ன கேடகின்றுய் சாமா! ஒன்றும் வியங்கவில்லையே" என்றுர

'பிரபோ! என் மன வேதனை புரிந் தும என்னை சோதிததல் நியாயமா? கேசவனது கரும வியாதி இன்னும் மூன்று ஜன்மங்களுக்கு அனுபவித்தே தீர வேணடும எனறு தாங்கள் கூறி னீர்கள் நானும இதில் ஒரு எழுத்து கூட மாறுமல அபபடியே கேசவனி டம கூறினேன் ஆனுல் இபபொழுது கேசவனது நோய தீர்ந்துவிடடது ஆதலின் தங்கள வாக்காக நான் கூறியது பொயத்து விடவில்லையா? ஆகையால நான் தெரிநதோ தெரி யாமலோ தேவரீா பால் ஏதோ குற் றம் செயதுள்ளேன என்று என் மனஸாக்ஷி கூறுகிறது " என்றுர் கிருஷண சர்மா

அதற்கு பகவான் "கிருஷண சர்மா! இதில் உம்முடைய குற்றம் ஒன்றும் இலலை; உம கூற்றும் பொயக்கவிலலை நீர் எம்மிடம் கேசவனின் வயிற்று நோயககான காரணத்தை மடடும கேடடதனுல் காரணத்தை மடடும் கூறினேன்;

ஆனுல் நாராயணி அம்மாவோ அந்நோய் தீர்க்கும் ஔடதமாக "ஸ்வாமி சரண ' நாம ஜெபத்தை வழங்கினுர் கேசவனும் அதை நம் பிக்கையுடன் ஸவீகரித்தான்

ஒரு பக்தனின நம்பிக்கை யைக் காபபாறறவும், 'ஸவாமி சரண' நாம ஜபத்தின வலி மையை உலகத்தாருக்கு உணர்த்த வுமே யாம் கேசவனது கரும வியா தியை நீக்கினேம்

இதில உம் குற்றம் ஒன்றும் இல்லை நீரும் நாராயணி அம்மாளும் என் அன்பிற்குகந்தவர்களே' என்று பகன்றுர்

தெளிந்த கிருஷ்ண சர்மா 'ஸ்வாமி சரண' நாம ஜபத்தை பாராயணம் செயது நற்கதி அடைந்தார்

(முற்றும்)

# ★ வைணவம் ★

டாக்டர் இரா. தண்டாயுதம்
மலேசியா

## மூனறு இரகசியஙகள

உயிர் வாழ்க்கையின் இலட்சியம முக்தி அதனை அடைவதறகாகவே உயிர்கள எல்லாம இறைவனைப பக்தி செயது பணிந்து கொண்டுள என உலக வாழ்க்கையில் உழன்று கொண்டு, முகதியாகிய இலட்சியததில் பற்றுக்கொண்டுளள உயிாகளுக்கெலலாம் வைணவம் மூன்று இரகசியங்களை (ரகஸ்ய த்ரய தத்துவார்ததம்) உரைக்கின்றது அவை திருமந்திரம், துவயம, சரம ஸ்லோகம் எனபபடும்

முதல் இரகசியமான திருமந்திரம் மூலமந்திரம் எனவும் பெயர் பெறும் ஓம் நமோ நாராயணாய என்னும் திருவெட்டெழுத்து மந்திரமே இபபெயர் பெறுகின்றது மூன்று பதங்களால் ஆகிய இம்மந்திரத்தை இரண்டு பகுதிகளாக்கிக் கூறுவர் ஓம் என்பது பிரணவ மந்திரம். இதனைச் சிறுவேதம் எனறும் கூறுவர் 'நமோ நாராயணா' என்பது மந்திர சேஷம். பிரணவத்தை இங்கு மந்திர சேஷம் விவரித்துக் கூறுகின்றது ஓம் எனும் பிரணவ மந்திரத்தில் உள்ள 'அ'– சகலமும் நாராயணனின் உடமை என்றும், 'உ' – ஆன்மாககள் பரதந்திரர்கள் எனறும், 'ம' – நான் சுதந்திரன் அலலன் எனறும் வைணவ மரபில் பொருளபடும் 'நாராயணாய' எனபது 'நித்தியமாக உளளவனுக்கு எல்லாக் கடமைகளும் செய்பவாகளாக இருபபோம்' எனப பொருள தரும்

இரண்டாம் இரகசியமான துவயம் மந்திர இரத்தினம் எனச் சிறபபு பெற்றது. இது இருபத்தைந்து திருவெழுததுகளைக கொண்டது ஆறு பதஙகளால ஆனது இரண்டு வாக்கியங்கள ஒன்று சேர்ந்து அமைந்தது மந்திர சேஷத்தை விவரித்துக கூறும இவவிரகசியத்தில் ஆசாரியர்களுக்குத் திருமந்திரத்தைக் காட்டிலும் மிகுநத ஈடுபாடு உண்டென வைணவ உலகம் கூறுகின்றது உபாயம, பேறு (புருஷாரததம்) என்னும் இரண்டையும் கூறுவதாலும், இரு வாக்யஙகளாக அமைந்திருபபதாலும் இது துவயம் எனப பெயர் பெறுகின்றது நாராயணனாகிய பரம்பொருளின் திருவடிகளில் கைங்கரியம் செயயும பொருட்டு அவனது திருவடிகளை உபாயமாகப பற்றுவதாக (ஸ்ரீமந் நாராயண சரணௌ; ஸ்ரீமதே நாராயணாய நம:) இந்த இரகசியம் அமைகின்றது;

மூன்றும் இரகசியமான சரம ஸ்லோகம் முபபத்திரண்டு திருவெழுத்துக்களையும பனனிரண்டு பதங்களையும் கொண்டது; உயிர்கள் பறறுவதறகுரியது இறைவனது திருவடி அல்லால் வேறொன்றுமில்லை என இநத இரகசியம தெளிவாகக் கூறுகினறது ஞான கரும மாாக்கஙகள் பற்றுவதறகு அரிதானவை எனப பாாத்தன் கலங்கி நிறகும் போது கண்ணன் கூறியதாக இந்த இரகசியம (ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம வரஜ அஹமத்வா ஸர்வ பாபேபயோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:) அமைகின்றது 'சுலபனும் சுவந்திரனுமான எனனைச சரணடைபவனை நான் சகல புண்ணிய பாபஙகளிலிருந்தும் விடுவிக்கிறேன்' என்பது இவ்விரகசியத்தின் பொருள் சரணாகதி அலலாமல மோட்ச சாதனம் வேறிலலை என்பதே இமமூனறும் இரகசியம் உணர்ததும் தெளிவான உண்மை

உயிாகள் அறிவதற்குரிய இம மூனறு இரகசியஙகளையும் நாராயணனே அருளி அருள செயததாக வைணவம் கூறுகினறது தாமே ஆசாரியனாகவும சீடனாகவும் இருந்து பதரிகாசரமததிலே திருவெட்டெழுதது மந்திரததை அவா வெளியிட்டருளினாா இரண்டாம் இரகசியமான துவயத்தைச சத்திய லோகத்தில் பெரிய பிராட்டியாரை முன்னிட்டு வெளியிட்டருளினார். மூன்றும் இரகசியத்தையோ பார்த்தனைக் காரணமாககிக் கிருஷ்ணவதாரத்தில் உபதேசித்தருளினார் இவவாறு இம்மூன்று இரகசியங்களையும இறைவனே தந்தருளியதால் வைணவ உலகம இவற்றைப பெரும் சிறபபுபபடுத்திப பின்பற்றுகின்றது

வைணவாகள் தவறாமல் அறிந்து கொள்ள வேணடிய இம்மூன்று இரகசியங்களைப பற்றிப பல வியாக்யானஙகள் செயயபபட்டுள்ளன திருவெட்டெழுத்து மந்திரமான மூல மந்திரததை வேர் என்றும், துவயத்தைக் கிளையெனறும் வருணிக்கும் தேசிகர், சரம ஸலோகத்தை மரமாகவே தம 'அம்ருதாஸ்வாதினி' யில போற்றுகிறார்

"மூலங்கிளையென ஒன்றிரண்டான
மொழியிரண்டும்
மேலொன்றிலையென நின்ற அவ்வித்
தகன் தன்னுரையும்

(43-ம் பக்கம் பார்க்க)

# சங்கராந்தி பூஜையும் சூரிய வழிபாடும்

ஆண்டு தோறும் தை மாதம் முதல், ஆனி மாதம் முடிய உள்ள ஆறு மாதங்களை உத்தராயணம் எனறும் ஆடி முதல், மார்கழி முடிய உள்ள மாதங்களை தக்ஷிணயணம் எனறும் கூறபபடுகிறது இதில் தை மாதம் முதல் தேதியை மகர சங்கராந்தி என்றும், தைப பொங்கல் என்றும கொண்டாடுகிறோம் ஒவவொரு ஆண்டுக்கும் சங்கராந்தி தேவதை என்பது ஒன்று உண்டு இதனை ''மகர சங்கராந்தி தேவதை'' என்று அழைபபார்கள் இவவிதம 60 வருஷங்கட்கும் தனித்தனி பெயர் உடைய சங்கராந்தி தேவதை உள்ளது இந்த தேவதையின தோற்றம உடை, வாகனம, உணவு, அணிந்து இருக்கும் ஆபரணம், புஷபம், இவற்றுக்குத் தக்கபடி தேசத்தின் அபபோதைய நன்மை திமைகட்குப பலன் கூறுவார்கள், இது பற்றிய ஒவ்வொரு ஆண்டுக்கான தெளிவான விளக்கமும பஞ்சாங்கஙகளில குறிப பிடபபட்டு இருக்கும இத்தகைய புண்ய தினமான சங்கராந்தியனறு சூரியன வடக்கு நோக்கி திரும்பி ஸஞ்சரிக்கத் தொடங்குவதால் இதற்கு உத்தர அயனம் என்று பெயர் இனறு சூரியன் மகர ராசியில் பிரவேசிபபார்

இன்றைய தினம சூரிய வழிபாடு செயய மிக உகந்த நாளாகும் எனவேதான் அன்று இக்கடவுளுக்கு விருபபமான சாக்கரைப பொங்கல் கரும்பு முதலிய பொருட்களைப படைக்கிறோம சூரியனை வழிபடுவதால் உலகில் அடைய முடியாதவை களே கிடையாது வேதம் கதிரவனைப பலவாறும் புகழுகிறது நாஸ்திகர்களாலும இல்லை எனறு கூற முடியாத கடவுள் சூரிய பகவானே என்பதை வேதம், ''ஸூஷ்டு ஈரயதி பரேரயதிதி ஸூர்ய:'' என்று கூறுகிறது மேலும், சூர்யன் ஆன்மாவைத் தட்டி எழுபபி நல்வழிபபடுததுபவர் என்பதை,

''ஓம் ய ஏஷோந்தராதித்யே ஹிரணமய: புருஷ'' எனப புகழ்கிறது உடல் ஆரோக்கியத்தை அளிபபதிலும அருட்கடல் என்பதை வேதம, ''ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத்'' என்றும, இதயநோயை இவர் நீக்குபவர் என்பதை ''ஹ்ருத்ரோகம் மம சூர்ய ஹரிமாணம் ச நாசய'' என்றும் குறிபபிடுகிறது கர்ம ஸாக்ஷி என்றும, ஜகத் சக்ஷு என்றும் அழைக்கபபடும் இவரே மழை பெயயககாரணம் எனபதை வேதத்தில்,

''யாபி ராதித்யஸ தபதி ரஸ்மிபிஸ் தாபி''

எனக கூறபபடுகிறது இதையே கீதாசார்யனும் ''ஆதித்யஜா ஜாயதே வருஷடி:'' என்று கூறுகிறார்

திப்பிராஜபுரம் B ரவிந்திரன் B A,

இததகைய சிறபபு மிகக சூர்ய பகவானைப போறறும சூர்ய நமஸ்கார மந்த்ரங்கள யஜுர் வேதத்தில் 32 அனுவாகங்களாக உளளன ரிக் வேதம் இவரைபபறறி ''மஹா ஸௌரம்'' என்ற ஒரு ஸ்துதியை வெளியிடுகிறது ஸாமவேதம சூரியனை ''சுக்ரியம'' எனற ஒபபற்ற ஸதுதியால போற்றுகிறது வேதம் போற்றும் ''சாக்ஷுஷமதீவித்யை'' என்பது இவரைப பற்றியதேயாகும். சூரியதேவனது பெருமையைக் கூறும் ''அசதி உபநிஷத்'' எனற உபநிடதத்தை ஜபிபபவர்கட்கு கண்ரோகம் ஏற்படாது என்றும், இந்த க்ரந்தத்தை ஜபம் செய்வதால் எத்தகைய பயங்கரமான ரோகம் ஏற்



படடு இருந்தாலும் அதைப போக்கி விடலாம் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன மஹாபாரதத்தில் திரௌபதிக்கு அடசயபாததிரம அளித்து என்றும் வற்றாத உணவு அளித்ததும இக்கதிரவனே ஆகும் பாண்டவர்கள் அக்ஞாத வாசம் விராட நகரத்தில் செய்தபோது கீசகனால் துன்புறுத்தபபட்ட தரெளபதி சூரியனே வேண்டித் தன்னைக் காபபாறறும்படி ஸ்துதித்தாள அபபோது சூரியன் தனது தூதனை அனுபபி கீசகனை விரட்டியதாகப பாரதம் கூறுகிறது மேலும் மஹாபாரதத்தில் சூரியனுக்கு முறையே சித்திரை முதல் 12 மாதங்களிலும பன்னிரண்டு பெயாகள கூறபபடுகின்றன அவையாவன: மித்ரன், ரவி, சூரியன், பானு, ககன், பூஷணன், ஹிரண்யகாபன், மரிசி, ஆதித்யன், ஸவிதா, ஆர்க்கன், பாஸ்கரன் என்பதாகும

இது தவிர சூரியனது பெருமையைக் கூறும் ஸம்ருதிகள பெண்கள சூரியனுக்கு அர்க்யம் கொடுத்தால ஏழு ஜன்மங்கள எடுத்தாலும் வைதவ்யம் அடையமாட்டாாகள என்று கூறுகிறது விதவை ஸத்ரீகளை கஷடங்களினின்று காபபவன என்று சூர்ய ஸஹஸ்ரநாமம் போற்றுகிறது மஹாபாரதம் இவரை ஸத்யஸவரூபி, த்ரிமூர்த்தி ஸ்வரூபன என்று புகழ்கிறது தஞ்சை மாவட்டம் சூரியனார் கோவில் என்ற தலம இவருக்கு உரிய சிறந்த தலமாகும்

சூரிய பகவானது கருணையை விளக்க சௌரபுராணத்தில் ஒரு வரலாறு கூறபபடுகிறது அதாவது, ஒரு காட்டில் தன் மனைவி மக்களுடன ஒரு ஏழை வசித்து வந்தான் அவனுக்கு ஒருநாள் காட்டில் எங்குத் தேடியும் உணவு கிடைக்கவில்லை அன்று மாலை வரை தண்ணீர்கூட அருந்தாத அம் மனிதன் சூரியனை நோக்கி தற்செயலாகத் தன் குறையைக் கூறிப புலம்பிவிட்டுத் தரையில மயங்கி வீழ்ந்தான். இரவுமுழுவதும் அவவிதம் மயக்கத்தில் கிடந்தான கண் விழித்த போது அவவழியே வந்த அரசன் ஒருவனது பாதுகாபபில் இருந்தான் தற்செயலாக இம்மனிதனைபபார்த்த அரசன் அவனைக் காபபாற்றியதோடு மட்டுமின்றி அவனது ஏழமை நிலை பறறி அறிந்ததும அவனைப பெருமசெல்வந்தனாகவும் ஆககி விட்டான இவையனைத்துக்கும் காரணம அம் மனிதன் அவவிதம் அன்ன ஆஹாரம் இன்றி இருந்த தினம் ஞாயிற்றுக் கிழமையாகும எனவே பானுவார விரதம் இருந்து சூரியனை வழிபட்டதால இபபேறு கிடைத்தது என்று சௌரபுராணம கூறுகிறது மேலும் இவரது பெருமையை பவிஷயபுராணம, சிலபபதிகாரம் முதலிய நூல்கள் கூறுகின்றன இவருக்கு உரிய "ஆதித்ய ஹ்ருதயம்" என்ற ஸ்தோத்ரத்தை ஜபித்தபினபே ராமபிரான் ராவணவதம் செயதாா ராமாயணத்தில் வரும் சுக்ரீவன் என்ற வானரனும், பாரதத்தில் வரும கர்ணனும் சூரிய புத்ரர்கள் ஆவார்கள் வாலகில்யாகள எனபபடும் 60,000 முனிவர்கள சூரியனது சீடர்கள் ஆவர், இவர்கள் மிகச்சிறிய வடிவம் உடையவர்கள் தண்டி, பிங்களன் என்பவர்கள் இவரது முக்கிய ஏவலர்களாகும்

சூரிய பகவானை சிவாகமங்களும் அபிதான சிந்தாமணி, சூரிய உபநிஷத் போன்ற நூல்களும், ஜோதிட நூல்களும புகழ்கின்றன சூரியன இல்லையேல் இவ்வுலகில் ஒளியும் உயிரினங்களும் இலலை எனபதை மஹா நாராயண உபநிஷத் "க்ருணி ஸூர்ய ஆதித்யோ பரபா வாத்யக்ஷரம்" என்று கூறுகிறது ஈசாவாஸ்யோபநிஷத் நமக்கு பரபரும்மத்தின் அழகான ஸகுணரூபத்தைப பார்க்க சூழ்யன அருள் புரிய வேண்டும என்று வேண்டுகிறது அதாவது,

"பூஷன்னேகர்ஷே யம ஸூர்ய
பராஜாபத்ய வ்யூஹ ரச்மீன்
ஸமூஹ தேஜோ யத் தே ரூபம்
கல்யாணதமம் தத் தே பச்யாமி"

என்பதாகும் சூரியனை மேல்நாட்டார் அபபல்லோ எனகினறனர் இவருக்கு உரிய ஸமித்து எருக்கு ஆகும் சீர்காழிக்கருகில் உள்ள திருவெண்காட்டில் சிலபபதிகாரம் புகழும் சூரியகுண்டம் உள்ளது திருக்கண்டியூரில் மாசி மாதமும், திருவேதிக்குடி, திருநாவலூரில பஙகுனி மாதமும், சித்திரை மாதம் குடந்தைக் காரோணம் என்று புகழபபடும நாகேசுவரன கோவிலிலும் சூரியபூஜை சிறபபாக நடக்கிறது. இன்று கதிரவன இத்தலங்களில் சிவபூஜை செயவதாக ஐதீகம தை மாதம் முதல் தேதியான மகர சங்கராந்தி தினத்தன்று திருவண்ணாமலை, திருவையாறு ஆகிய தலங்களில் இறைவன் சிறபபாக ஆராதிக்கபபட்டுத் தீர்த்தம கொடுககிறார். சங்கராந்தியன்று முதல் மன்னார்குடி என்ற வைணவத்தலத்தில் "ஸங்கரமண உத்ஸவம்" என்று சிறபபாகக் கொண்டாடபபடுகிறது மகரசங்கராந்தியனறுதான் மதுரையம்பதியில் இறைவன கல்யானைக்குக் கருமபு அளித்த திருவிளையாடல் நடந்த நன்னாளாகும் சபரிமலையில் ஐயபபனுக்குரிய "மகரஜோதி தரிசனம்" காண்பதும் இந்த புண்ய தினததன்றே யாகும்

இத்தகைய சிறபபு வாயந்த உத்தராயண புண்ய காலத்தில மரிககும ஜீவன்கள் நல்லகதி அடைவதாகக் கூறபபடுகிறது உத்தராயணத்தில இறந்த உயிர்கள முக்தி பெறுவதைப பறறி விவரிக்கும் பகவத்கீதை, "அக்னிர்ஜோதிர் அஹ: சுக்ல ஷண்மாஸா உத்தராயணம்" என்பதாகவும், நாராயணபட்டதரி எழுதிய நாராயணீயத்தில் "அக்னிவாஸர வளர்க்ஷபக்ஷகை: உத்தராயண ஜூஷாச தைவதை" என்றும் சிறப்பாக விவரிக்கிறது மஹாபாரதத்திலும் மிகச்சிறந்த யோகியான பீஷ்மர் உத்தராயண புண்ய காலம் வந்த பின்பே தன் உயிரை விட்டார் என்றும் சிறபபாக விவரிக்கிறது இத்தகைய பவித்ரமான உத்தராயண புண்ய காலம் தொடஙகும் மகர சங்கராந்தி தினததனறு நாம் அனைவரும் சூரிய வழிபாடு செய்து, கிரஹ தோஷங்கள் நீங்கி எல்லா வளமும் பெறுவோமாகுக

# ★ கீதை காட்டும் நல்வழி ★

### சிரத்தாத்ரய விபாக யோகம்
### அத்தியாயம்—17
### பகுதி—3

அசாஸ்த்ரவிஹிதம கோரம
தப்யந்தே யே தபோ ஜனு ।
தம்பாஹங்கார ஸம்யுக்தா:
காமராகபலான்விதா ॥ (17-5)

கர்சயந்த: சரீரஸ்தம
பூதக்ராமமசேதஸ: ।
மாம் சைவாந்த: சரீரஸ்தம்
தான் வித்யாஸுர நிஸசயான் ॥
(17-6)

"அஹங்காரமும் வீமபும உடையவர்களாக, ஆசையும் பறறுதலும் மிக்கவர்களாக, எநத அறிவிலிகள் உடலிலுள்ள இந்திரியங்களையும, உள்ளத்திலுறையும் என்னையும் துன்பத்திற்குள்ளாக்கிசாஸ்திரத்திற் கொவவாத கொடும் தவம் புரிகிறார் களோ அவர்களை அசுர வழியில் ஈடு படுபவர்கள் என்று அறிந்து கொள் வாயாக!"

உடலைத் துனபுறுத்திச் செயயப படுவதே தவம் எனறு சிலர் கருது வர். இத்தகையவர்கள் அதனுல் பிறரிடம் பெயரையும, புகழையும், பணத்தையும் பெற விழைவர். தூக் கிய கைகளுடன் ஒற்றைக் காலில் நிற்றல், முள்ளின்மீது படுத்துக் கிடத்தல், சூரியனையே உற்றுப பார்த்தல் போனற பலவகைக் கோர மான சாஸ்திரத்திறகு விரோதமான செயல்களில் இத்தகையோர் ஈடுபடு கின்றனர்

இன்றைய உலகில் போலிகள் நிறைய உளர் அசலுக்கும் போலிக்கு மிடையில் உள்ள வேறுபாடு காண முடியாத காரணத்தால் சாதாரண மக்கள் போலித் தவசி களைக் கண்டு ஏமாந்து அவர்களிடம் மனதைப பறிகொடுதது அவர்களது வாாதகையில் மயங்கி உள்ளதையும பறிகொடுததுத் தவிக்கும நிலைக்கு ஆளாகின்றனர் இந்தப போலித் துறவிகள் சாஸ்திரங்களைப பழிப்பர். பழைய சாஸ்திரங்கள் இந்தக் காலத் திறகு ஒவவாது எனறு கூறி தஙகள் மனம போல பிதற்றுவா வாமாசார முறைகளால சில கீழான சித்திகளைப பெற்று மாந்திரீகம், தாந்திரீகம் முதலியவற்றைக் கற்று எளிய மக் களைத் தம்பால ஈாபபா இவர் களில் பலர் ஸ்ரீவித்யா உபாசகா களைப போலக் காடசியளித்துக் கபட முறைகளைக் கையாளவா தங்களைப பகவான எனபா, பகவானின அவ தாரம் என்பர், உண்மையான சான் றோரை இழித்துரைபபர் தாங்கள அரும்பெரும் உபாசனை மற்றும் பூஜைகளைச செயவதாகவும், அதனுல் தங்களை அணுகும் பக்தர்களின் செல்வம பன்மடங்காகப பெருகும் என்றும் மயக்குறு வார்த்தைகளை அள்ளி வீசுவர் இத்தகைய போலித் துறவியர் பககமே நாம் நெருங்கக் கூடாது ஆனுல் பணத்தாசைப பிடித்த பாமர மக்கள் இவர்கள்பால் ஈர்க்கபபடடுப பெரும் துன்பத்திற் குள்ளாகினறுர்கள் இன்றும் இத் தகைய கபட நாடக சூத்திரதாரிகள் நம்மிடையே நிறைய இருக்கின்றனர் இத்தகையோர் வெளியே பார்க்கத் துறவியர் போல் வேடம் போடடா லும, உள்ளே காமம், குரோதம், லோபம போன்ற சகல துர்க்குணங் களும் நிறைநத தீயவர்கள் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

ஊனுடம்பாகிய ஆலயத்தில் உள் ளம் பெருங்கோயில் அல்லது கர்பப கிரகமாக விளங்குகிறது ஐம்பூதங் கள், ஐம்புலன்கள், ஐம்பொறிகள், மனம் ஆகியவை உடலின் கண் உள் ளன தீயவர்கள இவற்றைத தீய வழியால செலுத்தி அவற்றைத் துன் பத்திற்குள்ளாக்குகின்றனர் எந்த ஓர் இநதிரியமும நாம் அதைப பயன் படுத்தும முறையை அனுசரிததே நமககு அது நலம் பயபபதாகவோ அலலது தீமை தருவதாகவோ அமை கிறது நாக்கினுல் பொயயும பேச லாம உண்மையும் பேசலாம் நல்ல உணவை உண்டு நன்மையையும் அடையலாம மாறுக தீய உணவை உண்டு உடலைக் கெடுத்தும கொள்ள லாம

திரு டி கே நாராயணன்,
MSc MPhil.
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை

இத்தகையோர் தவம் எனனும் பெயரால் பல்வேறு கோரச் செயல் களில ஈடுபடுவர் உயிரோடேயே நிலத்துக்கடியில குழி தோண்டி சமாதியில் குறிபபிடட நாடகள் அமருதல், நீருக்கடியில் அமிழ்தல், முடபடுக்கையில் தூங்குதல், தீ மீது நடத்தல், கணணுடிச் சில்லுகள் மற்றும் அமிலம் போன்றவற்றை உடகொள்ளுதல், பல நாடகள் உண்ணுவிரதம் இருத்தல் போன்ற செயல்களால் தங்கள் உடலையும் வருத்திப பார்பபவர்களுக்கும் துன் பத்தைத் தநது அந்தர்யாமியாய உடலினுள் உறையும் இறைவனையும் அவர்கள் அவமதித்தவர் ஆகின்ற னர்.

அடுத்தபடியாக நமது உயிர் வாழ்க் கைக்கு ஆதாரமாயமையும் ஆகார மும் மூவகையாகப பிரிக்கபபடுகிறது. யக்ஞம், தபம், தானமும் அபபடியே வகைபடுததபபடுகின்றன. இது பற் றிய விளக்கம் கீழ்காணும் சுலோகத் தில் தொடங்குகிறது

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய
த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யக்ஞஸ்தபஸ்ததா தானம்
தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥(17-7)

'ஒவ்வொருவருக்கும் விருப்பமான உணவும் மூவகையாய் அமைந்துள்ளன அவற்றின் வேற்றுமையை இப்பொது கேள்'

காற்று மற்றும் நீருக்கு அடுத்த படியாக உயிர் வாழ உணவு இன்றியமையாததாகிறது உணவால் ஆனதே இவ்வுடம்பாகும் ஓடும் காருக்குப் பெட்ரோல் சக்தியளிப்பது போல, செயல்படும் இவ்வுடம்பிற்கு உணவு இயங்கு சக்தியைத் தருகிறது உணவை விரும்பாதோர் எவரையுமே நாம் பார்க்க முடியாது உயிர் வாழ அனைவருக்கும் உணவு தேவை என்றாலும், ஒவ்வொருவர் விரும்பும் உணவு வகைகள் இடத்துக்கு இடம் தேசத்திற்கு தேசம் மாறுபடுகிறது ஒருவருக்கு இனிப்பு அதிகம் பிடிக்கும் இன்னொருவருக்குக் காரம் அதிகம் பிடிக்கும். ஒருவர் தீவிர சைவ உணவுக்காரராய் இருப்பார் இன்னொருவரோ முழு அசைவ உணவுக்காராய் இருப்பார் இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் அவரவர் பெற்று விளங்கும் குணங்களேயாகும்

உணவு, அடிப்படையில் மூவகையாகப் பிரிக்கப்படுவது போலவே, ஒருவர் செய்யும் யகஞம், தானம், மற்றும் தவமும் மூவகையாகப் பாகுபடுத்தப்படுகின்றன ஸத்வ, ரஜஸ், மற்றும் தமோ குணங்களின் அடிப்படையில் மூவகையாகப் பிரிக்கப்படும் இவைபற்றி மேலும் விளக்கங்கள் கீழ்க்காணும் சுலோகங்களில் காணப்படுகின்றன

ஆயு ஸத்வபலாரோக்ய
ஸுகப்ரீதி விவர்தனா ।
ரஸ்யா: ஸ்நிக்தா ஸ்திரா ஹ்ருத்யா
ஆஹாரா' ஸாத்விகப்ரியா:॥ (17-8)

'ஆயுள், அறிவு, பலம், ஆரோக்கியம், சுகம், ருசி ஆகியவைகளை வளர்ப்பவைகள், ரசமுள்ளவைகள், பசையுள்ளவைகள், வலிவு தருபவைகள், இன்பமானவைகள் ஆகிய ஆகாரங்கள் சாத்விகர்களுக்குப் பிரியமானவைகள்'

உணவு வகைகளில் சத்வ குணம் மிக்க உணவு வகை அல்லது சாத்விக குணம் படைத்தவர்கள் விரும்பும் உணவைப் பற்றி இந்த சுலோகத்தில் பகவான் விளக்கம் தருகிறார் நமது குணம் நாம் உண்ணும் உணவைப் பொறுத்தே அமைகிறது சாக பக்ஷணியான யானை ஆற்றல் மிக்கது ஆனால் சாத்விகமாயிருக்கிறது மாமிச பக்ஷணியான புலியும், சிங்கமும் ஆற்றல் பெற்று விளங்கிடினும் கண்டதை அடித்துக் கொல்லும் கொடூர குணம் வாய்க்கப் பெற்றுள்ளன சாத்விக குணம் வாய்ந்தவர்கள் தெய்விக குணங்களை வளர்க்கும் உணவு வகைகளை விரும்புகிறார்கள்

இனிய பழங்கள், பழரசங்கள், பால், தயிர், மோர், ஆகியவை சக்தி நிறைந்தவை எளிதில் ஜீரணமாகக்கூடியவை வைட்டமின்கள், புரதச் சத்து, கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, தாதுப் பொருள்கள் போன்றவை அவற்றில் அடங்கியுள்ளன உடலில் கொழுப்பு, மற்றும் புரதச் சத்து வேண்டுமானால் மாமிச உணவு தேவை என்று வாதிடுவோரும் உளர் அது தவறு பால் தயிர், பருப்பு பழங்கள், கீரை வகைகளில் போதுமான புரதம் வைட்டமின் போன்ற சத்துக்கள் அடங்கியுள்ளன

உண்ணும் உணவு கண்ணால் கண்டாலும், மனதால் நினைத்தாலும் ருசியையும் பசியையும் ஏற்படுத்தக் கூடியதாக இருத்தல் வேண்டும் அதில் ரசம் அல்லது திரவ அம்சம் இருத்தல் வேண்டும் அடுத்து பசியைப் போக்கும் அளவுக்கு உடலில் சிறிது நேரம் இருக்கக் கூடியதாக இருத்தல் வேண்டும் மனதில் மகிழ்ச்சியை ஏற்படுத்துவதாக அமைய வேண்டும் இத்தகைய சாத்விக உணவினால் ஆயுள், அறிவு, ஆற்றல் மற்றும் ஆரோக்யம் வளரும் ராஜஸிக உணவைப் பற்றிய விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது

(தொடரும்)

---

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

அறக்கடவுள் "நீர் இளம் வயதில் தும்பிகளைப் பிடித்து வாலைக் கிள்ளி முள்ளைக் குத்தி வேடிக்கைப் பார்த்தீர் அவ்வினைக் கிவ்வினை" என்றார் "ஒருவர் அறியாப் பருவத்தில் செய்த பிழைக்காகத் தண்டிப்பது முறையில்லை ஆதலால் இன்று முதல் நான் ஒரு புதிய முறையை ஏற்படுத்துகிறேன். அதாவது பிள்ளைகள் சிறு வயதில் பதினான்கு வயது வரை அவர்கள் செய்கின்ற பாவம் அவர்களைச் சாரக் கூடாது அதில் ஒரு பாதி மாதா பிதாக்களைச் சாரட்டும்" என்று கூறினார் ஆகவே மாதா பிதாக்கள் குழந்தைகளுக்கு நல்லது கெட்டதுகளை எடுத்துக்கூறி நல்வழிப்படுத்த வேண்டும் இது தாய்தந்தைகளுக்கு ஒரு பாடமாக அமையும்

மேலும் கழுவில் ஏற்றிய அரசனை சபிக்கவில்லை இருட்டில் தெரியாமல் பட்டு விட்ட நளாயினிக்கு சாபம் தந்தார், என்ன காரணம்? இவருக்கு கழு ஏற்றம் ஒரு தண்டனை இல்லை நளாயினியின் கற்பை உலகிற்கு உணர்த்தவே அதனை ஏற்று அனுபவித்தார் தொண்டர்களின் பெருமைகளை உலகிற்கு உணர்த்த இறைவன பலகஷ்டங்களை அடைந்ததைப் போல கற்பரசிகளுக்காக மகான்கள் தங்களை வைத்து அவர்களின் சிறப்பை உலகிற்கு உணர்த்துவர் என்பது இதனின்று தெரியவரும்

★

''ஆதௌ வேதா பரமாணம'' எனபது சுருதி வாகயம வேதமே எலலாவறறிலும தலை சிறநத பர மாணம எனபது இதன பொருள வேததததை அடிபபடையாகக கொண டது ஸநாதன தாமம இதுவே இநது மதம எனறு ஆஙகிலேயா களால பெயா சூடடபபடடது வேததகதில பல தெயவஙகளைப பற றிய வசனஙகள காம காணடததி லும, ஞான காணடததிலும, வேதங களின் சிகரமான உபநிஷதஙகளிலும காணபபடுகினறன முககியமாக பரஜாபதி இந்திரன, அகநி, வரு ணன், வாயு, யமன், ருதரன, துாககை, லக்ஷமி, விஷ்ணு சபதங கள அநதநத தெயவததை உபாசிப பதால ஏறபடும பலனசளைக கூறுகின றன

அசரம எனறால அசித ஆக உயி ருளள பொருடகளான தாவர ஜங கம, திாயககுகள மறறும மனித ஆனமாககள எலலாம சித எனறும உயிரறறதான கல், மண போனறவை அசித எனறும அறியபபடுகினறன இவறறுககெலலாம இருபபிடமாக இருபபது பரமபொருள அதுவே பரஹம ' சபதததாலும வேதத தில கூறபபடுகிறது

நாராயணனே எலலாவறறுககும காரண வஸது என்பதை அதாவண வேதத்தில ''நாராயணுத பரஹமா ஜாயதே'' என்று ஆரமபிதது 'சிவ ஸச நாராயண 'சகரஸச நாராயண' ''தயாவா பருதவீஸச நாராயண எனறு ஓதுகிறது

''சபதாஞம அகாரோஸமி' என்று அகார வாசயன நானே என்று அா ஜுனனுககு விளமபினா பரணவம வேத மூலம அநத பரணவமாகிற 'ஓம மூனறு எழுததுககளின கூடடு 'ஓம' என்பது 'அ உ ம' இவவெழுத துககளின சோககை

அகாரத்தால அறியபபடுவது பரம் பொருள, உகாரததால அறியபபடு வது பிராடடியாகிற புருஷகார தததுவம, மகாரததால அறியபபடு வது ஜீவாதம தததுவம அவனை அடைவது அவனருளாலே எனபதை வேதம 'நாயமாதமா பரவசனேந லபய ந மேதயா ந பஹுநா சரு தேன யமேவைஷ வருநுதே தேந லபய தஸ்யைஷ ஆத்மா விவருநுதே தநூம ஸவாம' என்று எடுததுக காடடுகிறது

# பஞ்சாட்சர மகிமை

திரு K A தேவராஜன
சென்னை

இவறறுளளும விஷ்ணு, வாஸு தேவ, நாராயண சபதஙகள் வியாபக மநதிரஙகள எனபபடும இவையே பஞசாடசரி, ஷடாககூரி, அஷடா க்ஷரி, தவாதஸாகக்ஷரி மந்திரங களாக பரிணமிததுளளன

பஞசாடசரி - நாராயணுய
ஷடாடசரி - ஓம் விஷணவே நம
அஷடாடசரி - ஓம நமோ நாரா யணுய
தவாதஸாடசரி- ஓம நமோ பக வதே வாஸுதே வாய

நாம முதலில 'நாராயணுய' என னும சபதத்தைப பறறி சிறிது ஆராயவோம நார+அயந+ஆய= நாராயணுய ஆக இந்த சபதததால் அறியபபடுவது யாதெனில நாரங களுககெலலாம அயநமாக அதாவது ஆதாரமாக இருபபவன நாரம என்ற சொல அணட சராசரங்களை யும குறிககும் சரம என்றால சித,

நிரஞஜனோ நிாவிகலபோ நிராக யாதஸுதத தேவ ஏகோ நாராயண ' எனறு அதாவண வேதம பலவாறாக பரபரஹமததை விளிககிறது அவனைக காடடிலும வேறொன்று கிடையாது எனபதை வெளிபபடை யாக ''ந தவிதீயோஸதி கசசித'' எனறு ஓதுகிறது

'வேதாஹ மேதம புருஷம மஹாந தம' எனறு எநத ஒரு ஒபபறற பரம பொருளை வேதஙகளில தலை சிறநத 'புருஷ ஸுகதம' ஓதுகிறதோ, அநத இறைவனையே முழு முதற கடவுள எனறு உணா என அதாவண வேதம அறிவிககிறது

'' பரஹமணயோ தேவகீ புத்ரா |
பரஹமணயோ மதுஸுதநோ |
ஸாவ பூதஸதம ஏகம நாராயணம |
காரண ரூப அகார பரபரஹமோம |''

எனறு வேதம ஓதுகிறது

இதையே பகவான் ஸ்ரீமத பகவத கீதையில தன்னைக குறிககும போது

'' மம மாயா துரதயயா |
மாமேவ யே பரபத்யநதே
மாயாமேதாம தரந்தி தே |''

எனறு பகவான கீதையில உபதேசிப பதும இதுவே ஆக இறைவனை ஜீவாதமாவாகிய மகார தததுவம அடைய உகாரமான சகதி உதவுகிற படியால அருள வடிவமான பிராடடி யாக நாம வழிபடுகிறோம் ஆனால நாம அடைய வேண்டிய வஸது அகார வாசயனை ஸாவஸமாதமபரனை அவனே

அகார வாசயனை முழு முதற கடவுள யாா என்று ஆராயந்தால அது 'நாராயணனே என்று வேதத தால உணரலாகும ஏனைய சபதங களான ருதரன சிவம, பரஜாபதி, இநதிரன, அகநி இவையெலலாம முழு முதறகடவுள் என்ற பொருளை உணாநத முடியாது ருதரன் என றால அழசு செயபவன், க்ரூரமான வன என்று பொருள் சிவம் என் றால் மஙகளம என்று பொருள பர

